# ஜனாஸா தொடர்பான துஆக்கள்

தொகுப்பு: அஷ்ஷைக்: எம். ஜே. எம். ரிஸ்வான் மதனி

---------------------------------------------------

**புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே உரித்தானது. அவனது பேரருளும், சாந்தியும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களின் வழிநடந்த அனைத்துலக முஸ்லிம்கள்மீதும் நிலையாக உண்டாகட்டுமாக!**

இஸ்லாம் அனைத்து துறைகளுக்கும் வழிகாட்டுகின்ற அற்புத மார்க்கமாகும். ஜனாஸா தொடர்பான வழிமுறையும் அதில் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்களின் காலத்தில் ஆண்கள், பெண்கள் என பல மக்கள் மரணித்துள்ளார்கள். அவர்களை அல்லாஹ்வின் தூதர் அடக்கமும் செய்துள்ளார்கள், அவர்களை எவ்வாறு அடக்கம் செய்தார்களோ அவ்வாறோ நாமும் நமது ஜனாஸாக்களை அடக்கம் செய்ய வேண்டும்.

நல்லதுதானே என்று சொல்லிச் சொல்லி மார்க்கத்தில் இல்லாதவைகளை எல்லாம் அரங்கேற்றக் கூடாது. மு.ஃமின்களான இருப்போர் அல்லாஹ்வின் தூதரின் நடைமுறையை நேசிப்பதுடன், அதை தமது வாழ்வின் அனைத்து துறைகளிலும் நடைமுறைப்படுத்தவும் வேண்டும். அதைத்தான் அனைத்து இமாம்களும் வலியுறுத்துகின்றனர். ஜனாஸா தொடர்பான சுருக்கமான பார்வைதான் உங்களிடம் தரப்படுகின்றது. அதை அமுல்படுத்தி அல்லாஹ்வின் அருளைப்பெற முயற்சிப்போமாக!

## மரணம், விபத்துக்கள் பற்றி கேள்விப்பட்டதும்

**{إِنَّا لِلَّه ِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ} اللَّهُمَّ أْجُرْنِي فِي مُصِيبَتِي وَأَخْلِفْ لِي خَيْرًامِنْهَا**

**உச்சரிப்பு: இன்னாலில்லாஹி, வ இன்னா இலைஹி ராஜிவூன், அல்லாஹும்ம அஜிர்னீ ஃ(F)பீ முஸீபத்தீ, வஅ.ஃ(خ)லி.ஃ(F)ப் லீ ஹைர(خ)ரன் மின்ஹா. (முஸ்லிம்).**

**பொருள்:** நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள், நாம், அவன் பக்கமே மீளவிருக்கின்றோம், அல்லாஹ்வே! எனது சோதனையில் எனக்கு நற்கூலி வழங்குவாயாக!, அதைவிட சிறந்ததை எனக்குப் பிரதிஈடாக்கித் தருவாயாக! (முஸ்லிம்).

## ஒருவரின் உயிர் பிரிந்ததை அவதானித்தால்

**اَللَّهُمَّ اغْفِرْ لِ(فُلانٍ). وَارْفَعْ دَرَجَتهُ فِي الْمَ ْهْدِيِّيْنَ، وَاخْلُفْهُ فِيْ عَقِبِهِ فِي الْغَابِرِيْنَ، وَاغْفِرْلَنَا وَلَهُ يَا رَبَّ الْعَالَمِ ِيْنَ ،وَافْسَحْ لَهُ فِيْ قَبْرِهِ، وَنَوِّرْ لَهُ فِيْهِ. (مسلم)**

**உச்சரிப்பு : - அல்லாஹும்ம.ஃ(غ) பிர் லி (பெயரைக் குறிப்பிடவும்) வர்ப.ஃ(D) தரஜதஹு ஃபில் மஹ்திய்யீன, வக்லு.ஃப்ஹு ஃபீ அகி (B) பிஹி ஃபில்(غ) னா(B)பிரீன வ.ஃ(غ)பிர் லனா வலஹு யா ரப்பல் ஆலமீன், வ.ஃப்ஸஹ் லஹு ஃபீகப்ரிஹி வனவ்விர் லஹு ஃபீஹி.**

**பொருள்:** யா அல்லாஹ் ! இன்னாருக்கு (பெயரைக் குறிப்பிடவும்) நீ மன்னிப்பு வழங்குவாயாக! நேர்வழி பெற்றவர்களில் அவரது அந்தஸ்தை உயர்த்துவாயாக! மேலும்

அவருக்குப் பின்னால் (வாழ்ந்து வரும்) அவரது சந்ததியினரில் அவரது பிரதிநிதியை நியமிப்பாயாக! அகிலத்தாரின் இரட்சகனே! எமக்கும் அவருக்கும் பிழை பொறுப்பாயாக! அவரது மண்ணறையில் விரிவை ஏற்படுத்தி, அவருக்கு அதில் பிரகாசத்தையும் வழங்குவாயாக ! (ஆதார நூல்: முஸ்லிம்).

## ஆறுதல் பெறவும், கூறவும்.

**إِنَّ لِلَّهِ مَا أَخَذَ وَلَهُ مَا أَعْطَى وَكُلٌّ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى (صحيح البخاري)**

**உச்சரிப்பு: இன்ன லில்லாஹி மாஅஹ(خ)ஸ(ذ), வலஹு மா அஃதா, வகுல்லுன் இன்தஹு பிஅஜலின் முஸம்மா.**

**பொருள்: நிச்சயமாக கைப்பற்றியதும், வழங்கியதும் அல்லாஹ்வுக்குரியதாகும், ஒவ்வொன்றும் அவனிடம் காலவரையறையுடனே இருக்கின்றது.**

## ஜனாஸாத் தொழுகையின் முறை.

- முஸ்லிமான ஒருவர் மரணித்தால் அவரைக்குளிப்பாட்டி, கஃபனிட்டு, பின்னர் அவருக்காக தொழுது, பின் அவரை அடக்கம் செய்ய வேண்டும்.

**தொழும் முறை:** தொழுகைக்கு உழு செய்வது போன்று உழு செய்வதுடன், மனதால் நிய்யத் செய்தல், ஒருவர் இமாமாக நிற்கவேண்டும். தொழுவோர் அவருக்குப் பின்னால் அணி அணியாக நிற்பர், இமாமாக இருப்பவர் **“அல்லாஹு அக்பர்”**, என்ற வார்த்தையுடன் தக்பீர் கட்டுவார், பின்னர் **“அல்லாஹு அக்பர்”**, என மூன்று தடவைகள் கூறுவார். மொத்தம் நான்கு தடவைகளாகும். அணியாக நிற்கும் மஃமூன்களும் இமாமைப் போன்று செய்வர்.

- **ஆரம்ப தக்பீர்** கூறிய பின் **“அல்ஃபாத்திஹா”** அத்தியாயத்தை ஓதுதல், **இரண்டாவது தக்பீர்** கூறிய பின் நபி (ஸல்) அவர்கள் மீது **“ஸலவாத்”** கூறுதல், **மூன்றாவது** தக்பீர் கூறிய பின் ஜனாஸாவிற்காக பிரார்த்தனை செய்தல், **நான்காவது** தக்பீர் சொல்வதுடன், “ஸலாம்” கூறி முடிக்க வேண்டும். இது இமாம், மஃமூன் அனைவருக்கும் பொதுவானது.

## ஜனாஸாத் தொழுகையில் ...

**اللَّهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَصَغِيرِنَا وَكَبِيرِنَا وَذَكَرِنَا وَأُنْثَانَا وَشَاهِدِنَا وَغَائِبِنَا اللَّهُمَّ مَنْ أَحْيَيْتَهُ مِنَّا فَأَحْيِهِ عَلَى الْإِيمَانِ وَمَنْ تَوَفَّيْتَهُ مِنَّا فَتَوَفَّهُ عَلَى الْإِسْلَامِ اللَّهُمَّ لَا تَحْرِمْنَا أَجْرَهُ وَلَا تُضِلَّنَا بَعْدَهُ ((ابن ماجه ، سنن أبو داود))**

**உச்சரிப்பு : -அல்லாஹும்மஃ(غ) பிர் லிஹய்யினா, வமய்யிதினா, வஸகீரினா, வகபீரினா, வத(ذ)கரினா, வஉன்ஸானா, வஷாஹிதினா, வகாயிபினா, அல்லாஹும்ம மன் அஹ்யய்தஹு மின்னா ஃபஅஹ்யிஹி அலல் ஈமான், வமன் தவஃப்பைதஹு மின்னா ஃபதவஃப்பஹு அலல் இஸ்லாம். அல்லாஹும்ம லா தஹ்ரிம்னா அஜ்ரஹு வலா துழில்லனா பஃதஹு** (அபூதாவூத், இப்னுமாஜா).

**பொருள்:** யா அல்லாஹ்! எம்மில் உயிருடன் இருப்பவர்களுக்கும், இறந்தவர்களுக்கும், எம்மில் சிறியவர், பெரியவர்க்கும், எம்மிலுள்ள ஆணுக்கும்,

பெண்ணுக்கும், எம்மில் சமூகமளித்திருப்போருக்கும், சமூகமளிக்காதோருக்கும், மன்னிப்பு வழங்குவாயாக! யா அல்லாஹ் எம்மில் எவரை நீ உயிர் வாழச் செய்கின்றாயோ அவரை இஸ்லாமிய மார்க்கத்தில் உயிர் வாழச் செய்வாயாக! யா அல்லாஹ் எம்மில் எவரை நீ மரணிக்கச் செய்வாயோ அவரை ஈமானுடன் மரணிக்கச் செய்வாயாக! யா அல்லாஹ் இவரது கூலியை எம்மை விட்டும் தடுத்து விடாதே! இவருக்குப் பின்னால் எம்மை வழிகேட்டிலும் விட்டு விடாதே! (ஆதார நூல்: அபூதாவூத், இப்னுமாஜா).

**اللَّهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَعَافِهِ وَاعْفُ عَنْهُ وَأَكْرِمْ نُزُلَهُ وَوَسِّعْ مُدْخَلَهُ وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرَدِ وَنَقِّهِ مِنْ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الْأَبْيَضَ مِنْ الدَّنَسِ وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِنْ دَارِهِ وَأَهْلًا خَيْرًا مِنْ أَهْلِهِ وَزَوْجًا خَيْرًا مِنْ زَوْجِهِ وَأَدْخِلْهُ الْجَنَّةَ وَأَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ أَوْ مِنْ عَذَابِ النَّارِ.** (مسلم)

**உச்சரிப்பு:- அல்லாஹும் ம்மஃ(غ) பிர் லஹு , வர்ஹம்ஹு , வஆஃபிஹி, வஃபுஅன்ஹு , வஅக்ரிம் நுஸ்லஹு , வவஸ்ஸிஃ முத்ஹலஹு வக்ஸில்ஹு , பில்மாயி, வஸ்ஸல்ஜி, வல்பரத். வநக்கிஹி மினல்ஹதாயா, கமா நக்கைத்தஸ் தவ்பல் அப்யழ மினத்தனஸ். வஅப்தில்ஹு தாரன் ஹைரன் மின்தாரிஹி, வஅஹ்லன் கைரன் மின் அஹ்லிஹி, வஸவ்ஜன் ஹைரன் மின் ஸவ்ஜிஹ், வஅத்ஹில்ஹு ல் ஜன்னத்த, வஅயித்ஹு மின் அதாபில் கப்ர், அவ் மின் அதாபின்னார்.**

பொருள்:- அல்லாஹ்வே! இவரை மன்னிப்பாயாக! இவருக்கு அருள் செய்வாயாக! இவருரை சுபீட்சமாக வாழவைப்பாயாக! இவரை மன்னிப்பாயாக! இவருக்கான விருந்துபசாரத்தை மேன்மைப்படுத்தி வைப்பாயாக! இவர் புகுந்துள்ள இடத்தை விசாலப்படுத்திடுவாயாக! இவரை நீராலும், குளிர்ந்த நீராலும், ஆலங்கட்டியினாலும் கழுவிடுவாயாக! வெண்மையான ஆடையில் இருந்து அழுக்கை நீ தூய்மைப்படுத்தியது போன்று தவறுகளில் இருந்து இவரைத் தூய்மைப்படுத்திடுவாயாக! இவரது வீட்டைவிட சிறந்ததொரு வீட்டை இவருக்கு வழங்கிடுவாயாக! இவரது மனைவியை விட சிறந்த மனைவியை இவருக்கு வழங்குவாயாக! இவரை சுவனத்தில் நுழைவிப்பாயாக! மண்ணறையின் வேதனையில் இருந்து இவரை பாதுகாப்பாயாக! இவரை நரக நெருப்பில் இருந்தும் காப்பாயாக! (முஸ்லிம்)

## கப்றுகளை தரிசிக்கும் போது

**اَلسَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُؤْمِنِينَ وَأَتَاكُمْ مَا تُوعَدُونَ غَدًا مُؤَجَّلُونَ وَإِنَّا إِنْ شَاءَ اللَّهُ بِكُمْ لَاحِقُونَ (مسلم)**

**‘அஸ்ஸலாமு அலக்கும் (D)தார கௌமின் மு:.மினீன் வஅதாக்கும் மாதூஅ(D)தூன் கதன் முஅஜ்ஜலூன். வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லாஹிகூன்’**

**பொருள்:** நம்பிக்கை கொண்ட சமூக வீட்டாரே! உங்களுக்கு வாக்களிக்கப்பட்டது உங்களை வந்தடைந்து விட்டது, நாளை வரை நாம் அவகாசம் அளிக்கப்பட்டுள்ளோம், அல்லாஹ்வின் நாட்டப்படி உங்களை நாம் வந்தடையக் கூடியவர்களே! (ஆதார நூல்: முஸ்லிம்)

## மற்றுமொரு துஆ.

**اَلسَّــلاَمُ عَلَــى أَهْــلِ الــدِّيَارِ مِــنَ الْــمُؤْمِنِيْنَ وَ الْــمُسْلِمِيْنَ . وَيَــرْحَمِ اللهُ الْمُسْتَقْدِمِيْنَ مِنَّا وَالْمُسْتَأْخِرِيْنَ . وَإِنَّا إِنْ شَاءَ اللهُ بِكُمْ لَلاَحِقُوْنَ**

உச்சரிப்பு: **“அஸ்ஸலாமு அஹ்லத்(D)தியாரி மினல் மு.்.மினீன் வல்முஸ்லிமீன், வயர்ஹமில்லாஹுல் முஸ்தக் (D)திமீன மின்னா, வல் முஸ்த.்.ஹிரீன். வஇன்னா இன்ஷா அல்லாஹு பிகும் லலாஹிகூன்”**

**பொருள்:** மு.்.மின்களான, முஸ்லிம்களான வீட்டுடையார் மீது (அல்லாஹ்வின்) சாந்தி நிலவட்டுமாக! எம்மில் முந்திச் சென்றோருக்கும், பின்னால் வருவோருக்கும் அல்லாஹ் அருள்பாலிப்பானாக! அல்லாஹ்வின் நாட்டப்படி நாமும் உங்களை வந்தடையக் கூடியவர்களே! (முஸ்லிம்).

## ஜனாஸாவை மண்ணறையில் வைக்கின்ற போது:

**بِسْمِ اللَّهِ وَعَلَى مِلَّةِ رَسُولِ اللَّهِ (سنن ابن ماجه )**

உச்சரிப்பு: **பிஸ்மில்லாஹ், வஅலா மில்லத்தி ரசூலில்லாஹ்.** (இப்னுமாஜா)

பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயராலும், அல்லாஹ்வின் தூதரின் மார்க்கத்தின் அடிப்படையிலும் (மண்ணறையில் வைக்கின்றோம்), **அல்லது,**

**بِسْمِ اللَّهِ وَعَلَى سُنَّةِ رَسُولِ اللَّهِ (سنن ابن ماجه )**

**பிஸ்மில்லாஹ், வஅலா சுன்னத்தி ரசூலில்லாஹ்.** (இப்னுமாஜா) என்று கூறுதல்.

**பொருள்:** அல்லாஹ்வின் திருப்பெயராலும், அல்லாஹ்வின் தூதரின் வழிமுறையின் அடிப்படையிலும் (மண்ணறையில் வைக்கின்றோம்).

---

**குறிப்பு:** கல்ஹின்னை, படகொள்ளாதெனியைச் சேர்ந்த எம் . ஸீ. தாஜுத்தீன் அவர்கள் 23-01-2011 அன்று மரணமான போது அவர்களது பாசத்திற்குரிய மக்களால் இது வெளியிடப்பட்டது. அன்னாரின் மண்ணறை வாழ்வின் சுபீட்சத்திற்காகவும், மரணித்த அனைத்து முஸ்லிம் சகோதர, சகோதரிகளின் மண்ணறைகள் பிரகாசத்தால் ஒளிரவும் அல்லாஹ்வைப் பிரார்த்திப்போமாக!